OL/2016/15-T-I, II (NEW)



නව නිර්දේශය/புதிய பாடத்திட்டம்/New Syllabus

NEW

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

15 T I, II

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2016 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2016 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2016

ක්‍රිස්තියානි ධර්මය I, II
கிறிஸ்தவம் I, II
Christianity I, II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

## கிறிஸ்தவம் I

**கவனிக்க :**

(i) **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.
(ii) **1** தொடக்கம் **40** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் (1), (2), (3), (4) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான அல்லது மிகப் பொருத்தமான** விடையைத் தெரிவுசெய்க.
(iii) **உமக்கு வழங்கப்பட்டுள்ள விடைத்தாளில் ஒவ்வொரு வினாவுக்கும் உரிய வட்டங்களில் உமது விடையின் இலக்கத்தை ஒத்த வட்டத்தினுள்ளே புள்ளடியை (×) இடுக.**
(iv) அவ்விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள மற்றைய அறிவுறுத்தல்களையும் கவனமாக வாசித்து, பின்பற்றுக.

1. "குரலொன்று முழங்குகின்றது; பாலை நிலத்தில்; ஆண்டவருக்காக வழியைச் செம்மையாக்குங்கள்" இவ்வாறு உரைத்தவர் யார்?
   (1) இறைவாக்கினர் எசாயா (2) இறைவாக்கினர் மீக்கா
   (3) இறைவாக்கினர் மலாக்கி (4) இறைவாக்கினர் ஆமோஸ்

2. செக்கரியா, எலிசபெத்து என்ற இருவருக்கும் பொதுவான குணாதிசயம் **அல்லாதவை**
   (1) நீதியும் விசுவாசமும்
   (2) துதித்தலும் சந்தேகமும்
   (3) உறுதியற்ற நிலையும் தாழ்மையும்
   (4) ஒன்றை விளக்குவதற்கும் புரிந்துகொள்வதற்குமான ஆற்றல்

3. மரியாவின் முன்மாதிரியான வாழ்வின்படி, நீங்கள்
   (1) செய்திகளுக்கு உடனுக்குடன் துலங்கல்களைக் காட்டவேண்டும்.
   (2) உறவினர் பற்றி கரிசனையாயிருத்தல் வேண்டும்.
   (3) இறை சித்தத்திற்கு உண்மையாயிருத்தல் வேண்டும்.
   (4) நற்செய்தியை வரவேற்க வேண்டும்.

4. பிலிப்பியில் தலைமைத்துவம் வகித்த பெண்
   (1) பிரிஸ்கில்லா (2) தொற்கால்
   (3) லீதியா (4) தீய ஆவியிலிருந்து விடுபட்ட பெண்

5. இறைவாக்கினர் எசாயாவின்படி, இயேசுவானவரின் பிறப்பு
   (1) பெத்லகேமில் வாழ்ந்தோருக்கு நம்பிக்கை அளித்தது.
   (2) இருளில் வாழ்ந்தோருக்கு ஒளியாய் அமைந்தது.
   (3) பாபிலோனியாவில் சிறைவாசம் இருந்தோருக்கு ஆறுதல் அளித்தது.
   (4) இறைவாக்கினருக்கு பெரியதோர் அறைகூவலாயிற்று.

6. இயேசுவை சிலுவையில் அறையும்படி பிலாத்து தீர்ப்பு வழங்கியதற்கான காரணம்
   (1) பிலாத்து நீதிக்குத் தலைசாய்த்தமையால் ஆகும். (2) மக்களின் எதிர்ப்பு அதிகரித்தமையால் ஆகும்.
   (3) பரபாசை விடுவிக்க வேண்டியமையால் ஆகும். (4) இயேசுவானவர் விடுதலை கேட்காமையால் ஆகும்.

7. கிறிஸ்தவ திருமுழுக்கினால் கிடைக்கும் இறை ஈவுகள் யாவை?
   A - ஆவியானவருக்குள் புது வாழ்வு மேற்கொள்ளுதல்
   B - உடல் தூய்மையாகுதல்
   C - சமுதாயத்தில் ஏற்றுக்கொள்ளப்படுதல்
   D - பாவமன்னிப்பு பெறுதல்
   இவற்றில் மிகவும் சரியானவை
   (1) A யும் B யும் (2) A யும் C யும் (3) A யும் D யும் (4) B யும் D யும்

[பக். 2 ஐப் பார்க்க

8. திருமுழுக்கு யோவான் இன்று சமுதாயத்தினர் மத்தியில் தோன்றினால் சாதாரண மக்களுக்கு அவர் கூறும் செய்தி என்ன?
   (1) நீதி நியாயம் என்பதன் பெறுமதி பற்றியாகும்.
   (2) அதிகாரத்தை முறையாகப் பாவிப்பதன் பெறுமதி பற்றியாகும்.
   (3) செயல்மிகு விசுவாசத்தின் பெறுமதி பற்றியாகும்.
   (4) பகிர்ந்து கொள்வதன் பெறுமதி பற்றியாகும்.

9. "நான் என் தந்தையின் அலுவல்களில் ஈடுபட்டிருக்க வேண்டும் என்பது உங்களுக்குத் தெரியாதா?" என்பதிலிருந்து நாம் பெற்றுக் கொள்ளும் வழிநடத்தல்
   (1) இறையரசின் செயற்பாட்டைப் புரிந்து கொள்ள வேண்டும்.
   (2) பெரியோர்களின் அறிவைச் சோதித்துப் பார்க்க வேண்டும்.
   (3) எப்போதும் ஆலயத்தில் தரித்திருக்க வேண்டும்.
   (4) பெற்றோரின் பார்வையிலிருந்து தூர விலகி இருக்க வேண்டும்.

10. தேவ இராச்சியம் வளர்ச்சியடைவதற்கு,
   (1) கிறிஸ்தவ சபைகள் பெருக வேண்டும்.
   (2) இடையூறுகள் கிடையாதென எண்ணுதல்.
   (3) எப்போதும் ஒரே நிலையான வளர்ச்சி வேண்டும்.
   (4) இறை வல்லமையில் நம்பிக்கை கொள்ள வேண்டும்.

11. அமைதியும் சமாதானமும் நிலைபெறச் செய்வதற்கு அவசியமானது
   (1) நிலையான அரசியல் சூழல்
   (2) நீதியும், நியாயமும் நிலைபெறச் செய்தல்
   (3) அமைதியற்ற செயல்களை எதிர்த்தல்
   (4) பிறரை நியாயத் தீர்ப்பிலிருந்து விலக்குதல்

12. "உங்கள் இடையை வரிந்து கட்டிக் கொள்ளுங்கள். விளக்குகளும் எரிந்து கொண்டிருக்கட்டும்". இக்கூற்று **விளக்காத** ஒரு உண்மை
   (1) எதிர்பார்ப்புடன் இருத்தல்
   (2) ஆயத்தமாயிருத்தல்
   (3) அறிவிக்கப்படும் வரை இருத்தல்
   (4) விழிப்புடனும் பொறுமையுடனும் இருத்தல்

13. 'நல்லாயர்' குணாதிசயத்தின்படி, கிறிஸ்தவ தலைவர்கள்
   (1) தமது அதிகாரத்தை வெளிப்படுத்த வேண்டும்
   (2) மந்தையின் இயல்புகளைப்பற்றி ஆராய வேண்டும்
   (3) மந்தையின் எண்ணிக்கையை அதிகரிக்க வேண்டும்
   (4) அர்ப்பணிப்புடன் மந்தையைப் போசிக்க வேண்டும்

14. அன்பின் சிறப்பை வெளிப்படுத்துவது
   (1) இறைவனுக்கும், தேவைகளின் மத்தியில் இருப்போருக்கும் அன்பு செய்தலாகும்.
   (2) தீமைக்கு அடிபணியாமையாகும்.
   (3) பெரியோர்களுக்குக் கீழ்ப்படியாமையாகும்.
   (4) ஒழுக்கமுடன் நடத்தலாகும்.

15. அமைதி / சமாதானத்தின் காலத்தைப்பற்றி இறைவாக்குரைத்தவர்
   (1) ஆமோஸ்
   (2) மீக்கா
   (3) மலாக்கி
   (4) ஓசேயா

16. உரோமைய தூதுரைப் பிரயாணத்தின்போது புயல் காற்றின் நடுவில் பவுல் தந்த போதனையை ஏற்றுக்கொள்ளும் கிறிஸ்தவன், வாழ்க்கைப் பிரச்சினைகளின்போது
   (1) சொத்துக்களை உபயோகிக்க வேண்டும்.
   (2) பிரச்சினைகளின் தன்மையை உணர வேண்டும்.
   (3) பிரச்சினையை விட்டு நீங்க வேண்டும்.
   (4) விசுவாசத்துடன் சான்று பகர வேண்டும்.

17. சக்கேயுவின் மனந்திரும்புதலுக்கு முக்கியமான காரணமாய் அமைந்தது,
   (1) தனது பிழையை உணர்ந்து கொள்வதற்கு எடுத்த முயற்சியாகும்.
   (2) இயேசுவை சந்திப்பதற்கான ஆவலாகும்.
   (3) இயேசுவானவர் சக்கேயுவை ஏற்றுக் கொண்டமையாகும்.
   (4) மக்கள் சக்கேயுவை புறக்கணித்தமையாகும்.

18. இயேசுவானவரைப் போன்றே இன்றைய கிறிஸ்தவரும் எதிர்நோக்கும் சோதனைகளாவன
   A - உணவு பெற்றுக்கொடுப்பதற்கான சவாலாகும்
   B - தீமையான சக்திகளுக்கு அடிபணிவதற்கான சவாலாகும்
   C - மக்கள் மத்தியில் பிரபல்யமாவதற்கான சவாலாகும்
   D - இறை வல்லமையை செயற்படுத்துவது பற்றிய சவாலாகும்
   இவற்றுள் மிகச் சரியான விடைகள்
   (1) A யும் B யும்
   (2) B யும் C யும்
   (3) B யும் D யும்
   (4) C யும் D யும்

19. நீதியை வெளிப்படுத்தும் ஒரு வசனமாவது,
   (1) "எனது பாவத்திலிருந்து என்னை விடுவித்தருளும்".
   (2) "நீதி வெள்ளமெனப் பொங்கி வரவும், நேர்மை வற்றாத ஆறாகப் பாய்ந்து வரவும்".
   (3) "தங்கள் வாள்களை கலப்பைக் கொழுக்குகளாகவும், தங்கள் ஈட்டிகளை கருக்கரிவாள்களாகவும் அடித்துக் கொள்வார்கள்".
   (4) "ஒவ்வொருவரும் தம் திராட்சைத் தோட்டத்தின் நடுவிலும் அத்திமரத்தின் அடியிலும் அமர்ந்திருப்பர்".

[பக். 3 ஐப் பார்க்க

20. பவுல் எபேசுவில் செய்தவற்றின் நோக்கிலிருந்து இன்றைய கிறிஸ்தவர்களில் சிலர் எதிர்நோக்கும் சவால்
    (1) தமது தொழிலிருந்து விலகி புதிய மார்க்கத்தைத் தேடிச் செல்லல்
    (2) பிழையான போதனைகளை விட்டு விலகி, ஒரே கடவுளை வழிபடுதல்
    (3) போராட்டங்களின் மத்தியில் பின்வாங்குதல்
    (4) பிழையானவற்றைப் பின்பற்றத் தூண்டுதல்

21. இறைபணிக்கான அழைப்பிற்கு ஒருவர் அளிக்க வேண்டிய முக்கியமான துலங்கல் / மாறுத்தரம்
    (1) இறையியல் கற்றபின் இறைபணியில் சேர்ந்து கொள்வேன்
    (2) சகோதரி கல்வி பயின்று முடித்த பின்னர் சேர்ந்து கொள்வேன்
    (3) மேற்படிப்பை சில காலத்திற்கு நிறுத்தி வைத்துவிட்டு வருவேன்
    (4) முழு நேரத்தையும் இறைபணிக்கென அர்ப்பணித்து சேர்ந்து கொள்வேன்

22. சமுதாயத்தில் வழிவிலகிச் சென்ற பிள்ளைகளுக்கு கிறிஸ்தவனாகிய உமது பொறுப்பு
    (1) அவர்களுக்கு இறையரசின் எதிர்பார்ப்புகளை விளக்க வேண்டும்
    (2) அவர்கள் விலகிச் செல்வதற்கான காரணத்தை அறிய வேண்டும்
    (3) மனந்திரும்புதலின் மூலம் வரும் இறைவனின் மகன் / மகள் என்ற நிலையை எடுத்துக்காட்டி அவர்களை ஏற்றுக் கொள்ள வேண்டும்
    (4) அவர்களுக்குப் பாவத்தின் விளைவுகளை எடுத்துக் காட்ட வேண்டும்

23. துன்புறும் பணியாளரைப் பின்பற்றும் ஒரு கிறிஸ்தவன் தனது பணியின் போது
    (1) துன்பங்களிலிருந்து விலகிச் செல்ல வேண்டும்
    (2) துன்புறுதலிலும் பிறருக்காகத் தன்னைச் செலவிடுவதிலும் ஈடுபட வேண்டும்
    (3) துன்புறுதலின் மத்தியில் இறை சித்தத்தைத் தேட வேண்டும்
    (4) துன்புறுவோர் மேல் இரக்கம் கொள்ள வேண்டும்

24. ஆரம்பகாலச் சீடரிடமிருந்து இன்றைய கிறிஸ்தவத் திருச்சபை நோக்கும் முக்கிய சவால் / அறைகூவல்
    (1) மக்களை மகிழ்ச்சியுறச் செய்தல்
    (2) தலைமைத்துவத்திற்குச் செவி சாய்த்தல்
    (3) வேறுபாடுகளின் மத்தியில் ஒற்றுமைப்படுதல்
    (4) மீன்பிடித்தல் பற்றி அனுபவம்

25. இறையரசின் பேறுகளைப் பெற்றுக்கொள்ளும் உரிமை ஏழைகளுக்கு அருளப்படுவது
    (1) ஒருவரின் குறைபாடுகளை நிறைவு செய்து கொள்வதற்காகும்.
    (2) அவர்கள் இறைவனுக்குள் தரித்திருப்பதற்காகும்.
    (3) செல்வந்தனாகுதல் நல்லதல்ல என்பதனாலாகும்.
    (4) அவர்கள் சிரித்து புன்னகை செய்யலாம் என்பதற்காகும்.

26. ஒடுக்கப்படுவோருக்கு இஸ்ரயேலரின் வரலாற்றிலிருந்து கிடைக்கும் வழிநடத்துதல்
    (1) எப்போதும் இறைவனிடம் வேண்டுதல் செய்தல்
    (2) துன்புறுத்துவோருக்கு எதிராக முறுமுறுத்தல்
    (3) துன்புறுத்துவோருக்கு எதிராக எழுதல்
    (4) துன்பங்களைப் பொறுத்துக்கொண்டிருத்தல்

27. இயேசுவானவரின் வெற்றிகரமான எருசலேம் பயணத்தை முன்னுதாரணமாகக் கொள்ளும் ஒரு கிறிஸ்தவன்
    (1) தாழ்மையாக மட்டும் செயல்பட வேண்டும்.
    (2) சமாதானத்தோடும், சகோதரத்துவத்தோடும் செயல்பட வேண்டும்.
    (3) தெருக்களில் வெற்றிப் பேரொளி எழுப்ப வேண்டும்.
    (4) வெற்றிவாகையுடன் செயல்பட வேண்டும்.

28. அரிமத்தியாவின் யோசேப்பின் செயற்பாட்டின் முக்கியத்துவமாவது
    (1) இயேசுவானவரின் உடலுக்கு மரியாதை செய்தமையாகும்.
    (2) யூதரின் செயல்களைக் கண்டித்தமையாகும்.
    (3) இயேசுவானவருடன் நெருங்கிய பழகியமையாகும்.
    (4) உரிய வேளையில் சத்தியத்திற்கு சான்று பகர்ந்தமையாகும்.

29. திருச்சட்டமும் இறைவாக்கும் இயேசுவில் நிறைவு பெற்ற நிகழ்வு, அவர்,
    (1) யோர்தான் நதியில் திருமுழுக்குப் பெற்ற வேளையிலாகும்.
    (2) இயேசுவே வாழுகின்ற கடவுள் என்று பேதுரு சான்று பகர்ந்த போதாகும்.
    (3) மலைமீது இயேசுவானவர் தோற்றம் மாறிய (மறுரூபமான) போதாகும்.
    (4) உயிர்த்தெழுந்தபின் சீடர்கள்முன் தோன்றிய போதாகும்.

30. இயேசுவானவரின் கெத்சமனே செபத்தை முன்மாதிரியாகக் கொள்ளும் நீர்,
    (1) ஆன்மீக பிரச்சினைக்கு முகங்கொடுக்க வேண்டியிருக்கும்.
    (2) எதிரிகளுக்காக வேண்டுதல் செய்ய வேண்டும்.
    (3) மக்களுக்கு சமாதானத்தைப் பெற்றுக்கொடுக்க வேண்டும்.
    (4) சுயநலம் விடுத்து இறை சித்தத்திற்கு இடமளிக்க வேண்டும்.

[பக். 4 ஐப் பார்க்க

31. இயேசுவானவரின்படி பரிசேயரின் வெறுமையான உள்ளத்தைக் குறிக்கும் உதாரணம் ஒன்று
  (1) ஆலய மன்றத்தில் தன் பெயரை பெரிதாகப் பொறித்தல்
  (2) இறந்து போனவரின் நற்செயல்களைப் போற்றுதல்
  (3) தனது உடலின் சுத்தம் பற்றி அதிகளவில் அக்கரை கொள்ளல்
  (4) வயோதிப இல்லம் கட்டுவதற்கென அடிக்கல் நாட்டுதல்

32. ஆபிரகாம், மோசே என்போரின் எதிர்பார்ப்புகள் அதி முக்கியமானவை. ஏனெனில்,
  (1) அவை இறை சித்தம் நிறைவேறுதல் பற்றிய எதிர்பார்ப்புகள் என்பதாலாகும்.
  (2) அவை சமுதாய தலைமைத்துவம் வளர்ச்சியடைதல் பற்றிய எதிர்பார்ப்புகள் என்பதாலாகும்..
  (3) அவற்றை நிறைவேற்றுவதில் சிரமங்கள் ஏற்படாமை என்பதாலாகும்.
  (4) அவை சமுதாய கூட்டு எதிர்பார்ப்புகள் என்பதாலாகும்.

33. இன்றைய சமுதாயம் செல்வத்தின் பின்னே செல்வதற்கான காரணம் என்ன?
  A - காண்பவை, கேட்பவை என்பவற்றினால் கவரப்படுதல்
  B - சமுதாயம் பொதுநலத்தில் கரிசனையாய் இருத்தல்
  C - மக்கள் சமயத்தினை பின்பற்றுதல்
  D - போட்டி மனப்பான்மை சமுதாயத்தை மேற்கொள்ளல்

இவற்றில் மிகச் சரியானவை
  (1) A யும் B யும் (2) A யும் C யும் (3) A யும் D யும் (4) C யும் D யும்

34. "நோயுற்றிருந்தேன், என்னைக் கவனித்துக் கொண்டீர்கள்" இதனை இயேசுவானவர் நடைமுறையில் காட்டும் செயல்
  (1) தகப்பன் சுகம் பெறுவதற்காக மகன் அவரை வெளிநாட்டிற்கு அனுப்புதல்
  (2) சுகமில்லாத ஒரு பெண்ணுக்கு சபை அங்கத்தவர்கள் பணம் சேர்த்து அனுப்புதல்
  (3) ஏழை ஒருவர் வருமானத்தில் ஒரு தொகுதியை புற்றுநோய் வைத்தியசாலைக்கு அனுப்புதல்
  (4) விபத்தில் சிக்கி வைத்தியசாலையில் இருக்கும் நண்பனை தினமும் பார்க்கச் செல்லுதல்

35. பேதுரு அவர்கள் சவாலை எதிர்நோக்கிய போது மனந்தளராது செயற்பட்டமைக்கான ஒரு உதாரணம் ஆவது
  (1) அவர் இயேசுவை அறியேன் என்று மறுதலித்தமை
  (2) தலைமைச் சங்கத்தின் அனுமதி கிடைக்காத பொழுதிலும் அவர் நற்செய்தியைப் போதித்தமை
  (3) இயேசுவானவர் எழுப்பிய வினாக்களுக்கு பதில் கூறியமை
  (4) பெந்தக்கோஸ்து தினத்தில் பிரசங்கம் செய்தமை

36. ஏழை விதவைப் பெண்ணின் காணிக்கையிலிருந்து ஒரு கிறிஸ்தவன் பெற்றுக்கொள்ளும் செய்தி
  (1) காணிக்கையுடன் தியாக மனப்பான்மையும் சேர்ந்திருக்க வேண்டும்.
  (2) காணிக்கை கொடுப்பவர் செல்வத்தைக் கருத்தில் கொள்ள வேண்டும்.
  (3) காணிக்கைத் தொகையை அதிகரிக்க வேண்டும்.
  (4) காணிக்கையின் நோக்கத்தைத் தீர்மானித்தல் வேண்டும்.

37. ஆரம்பகால திருச்சபையின் திருத்தூதுப் (நற்செய்தி) பணியிலிருந்து இன்றைய கிறிஸ்தவ திருச்சபை பெற்றுக்கொள்ளும் செய்தி
  (1) தினமும் துதி மற்றும் குணப்படுத்தல் வழிபாடு நடத்துதலாகும்.
  (2) முழுக் காலத்தையும் நற்செய்திப் பணிக்கு அர்பணித்தலாகும்.
  (3) உயிர்த்த இயேசுவைப் பற்றி சான்று பகர்தலும், கற்பித்தலுமாகும்.
  (4) சமுதாய நலன்புரி சேவைக்காக மக்களை ஊக்கப்படுத்தலாகும்.

38. திருச்சபையின் ஒற்றுமை வளர்ச்சிக்கென விசேடமாகக் கவனிக்க வேண்டிய போதனை
  (1) கிறிஸ்துவானவர் தலையாயிருப்பதால், முழு உடலும் ஒன்றுபடுகின்றது.
  (2) கிறிஸ்துவானவர் இனங்களுக்கு இடையிலான நடுச்சுவரை தகர்த்தெறிந்துள்ளார்.
  (3) கிறிஸ்துவின் சிலுவையில் இருந்து பெறும் மன்னிப்பை முக்கியப்படுத்த வேண்டும்.
  (4) சீடர்கள் உடைமைகள் யாவற்றையும் பொதுவானதாகக் கொண்டனர்.

39. இன்றைய பன்மைச் சமுதாயத்தில் கூட்டுச் சேர்ந்து வாழுதலை ஊக்குவிக்கும் ஒரு கிறிஸ்தவன்
  (1) அனைத்துத் தடைகளையும் மேற்கொண்டு, இறையன்பை சமுதாயத்தில் பரப்ப வேண்டும்.
  (2) அனைத்துச் சமயங்களையும் சம நிலையில் ஏற்றுக் கொள்ள வேண்டும்.
  (3) சுற்றாடலைப் பேணும் வழிமுறைகளைக் கண்டறிய வேண்டும்.
  (4) அழைக்கப்படாவிட்டாலும் சமுதாய கொண்டாட்டங்களில் கலந்து கொள்ள வேண்டும்.

40. எசாயா எதற்காக இறைவாக்கினர் அழைப்பைப் பெற்றார்?
  A - புற இனத்தவரின் பாவத்தை மன்னிப்பதற்காகும்
  B - மக்களின் விசுவாசத்தை அதிகரிப்பதற்காகும்
  C - இறைவனின் பரிசுத்தத்தை அறிவிப்பதற்காகும்
  D - கடினமான செயல்களைச் செய்வதற்காகும்

இவற்றில் மிகச் சரியான விடைகள்
  (1) A யும் B யும் (2) A யும் C யும் (3) A யும் D யும் (4) C யும் D யும்

* *

[பக். 5 ஐப் பார்க்க

OL/2016/15-T-I, II (NEW)



නව නිර්දේශය/புதிய பாடத்திட்டம்/New Syllabus

NEW

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

15 | T | I, II

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2016 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2016 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2016

| | |
|---|---|
| ක්‍රිස්තියානි ධර්මය | I, II |
| கிறிஸ்தவம் | I, II |
| Christianity | I, II |

## கிறிஸ்தவம் II

**கவனிக்க:**

※ **முதலாம்** வினாவுக்கும் மேலும் **நான்கு** வினாக்களுக்குமாக மொத்தம் **ஐந்து** வினாக்களுக்கு விடை எழுதுக.
※ முதலாம் வினாவுக்கு **20** புள்ளிகளும் ஏனைய ஒவ்வொரு வினாவின் விடைக்கும் **10** புள்ளிகள் வீதமும் வழங்கப்படும்.

**1.** (i) (அ) "உன்னத கடவுளின் இறைவாக்கினர்" என்று அழைக்கப்பட்டவர் யார்?
(ஆ) யார் பாடிய துதிக்கீதத்தில் இது காணப்படுகிறது?

(ii) நாசரேத்து தொழுகைக் கூடத்தில் இயேசுவானவர் கூறிய **இரண்டு** முதுமொழிகள் யாவை?

(iii) (அ) இயேசுவின் சிலுவையைச் சுமக்க உதவியவர் யார்?
(ஆ) இதிலிருந்து கிறிஸ்தவர் பெற்றுக்கொள்ளும் சவால் என்ன?

(iv) "உயிரோடு இருப்பவரைக் கல்லறையில் தேடுவது ஏன்?"
(ஆ) இவ்வார்த்தைகளை வானதூதர் யாருக்குக் கூறினார்?
(ஆ) இவ்வார்த்தைகள் இன்று எமக்குத் தரும் செய்தி என்ன?

(v) "ஐயா, நீர் என் வீட்டிற்குள் அடியெடுத்து வைக்க வேண்டாம்; ....... ஆனால் ஒரு வார்த்தை சொல்லும், என் ஊழியர் நலமடைவார்."
மேற்கூறியதிலிருந்து நூற்றுவர் தலைவர் வெளிப்படுத்தும் **இரு** குணாதிசயங்கள் யாவை?

(vi) (அ) பத்துக் கட்டளைகளில் வாக்குத்தத்ததுடன் கூடிய ஓர் கற்பனை எத்தனையாவது கற்பனையாகக் காணப்படுகிறது?
(ஆ) இக் கற்பனையை எழுதுக.

(vii) "இதோ என் தூதனை அனுப்புகிறேன். அவர் **எனக்கு முன்** உமது வழியை ஆயத்தஞ் செய்வார்."
(அ) இதனை உரைத்த இறைவாக்கினர் யார்?
(ஆ) தடித்த எழுத்தில் உள்ள வார்த்தைகளை விளக்குக.

(viii) (அ) இயேசுவானவர் நிறைவுசெய்த புதிய உடன்படிக்கை என்ன?
(ஆ) இவ்வுடன்படிக்கையை எப்போது ஏற்படுத்தினார்?

(ix) (அ) தனது வினாக்களுக்கு விடை தேடி, இரவில் இயேசுவைக் காணவந்த யூதத் தலைவர் யார்?
(ஆ) இயேசுவின் விடையில் இருந்து நாம் கற்பது என்ன?

(x) இயேசுவானவரின் உன்னத நற்செய்தியான மன்னிப்பை தம் வாழ்வில் அனுபவித்தமையால் அண்மைக் காலத்தில் சிறை கூடத்திற்குச் சென்று, தமக்கு குற்றம் இழைத்தவர்களுக்கு மன்னிப்பு வழங்கிய **இரு** கிறிஸ்தவ குருமார் யாவர்?

**2.** (i) (அ) "நீரும் போய் அப்படியே செய்யும்" இயேசுவானவர் இதனை யாருக்குக் கூறினார்?
(ஆ) இதனை எந்த நிகழ்வின் பின்னணியில் கூறினார்?

(ii) (அ) அவர்கள் இதனை விளக்குவதற்கு இயேசுவானவர் கூறிய உவமையில் வரும் **மூன்று** கதாபாத்திரங்களும் யாவை?
(ஆ) அந்நிகழ்விற்கு எவ்வாறான மாறுத்தரம் காட்டினர்?

(iii) இங்க காணும் நல்ல கதாபாத்திரத்தின் மூலம் வெளிப்படும், நமது வாழ்விற்கு உதவக்கூடிய, **ஐந்து** குணாதிசயங்கள் யாவை?

[பக். 6 ஐப் பார்க்க

3. யூத சமயத்தின் முக்கிய சமயக் குழுக்கள் இயேசுவானவருடன் உரையாடல்களை மேற்கொண்டன.
   (i) (ஆ) இக்குழுக்கள் **இரண்டின்** பெயர்கள் என்ன?
   (ஆ) இவை எந்த சமயநிலையங்களை தமது மையத்தளங்களாகக் கொண்டிருக்கின்றன?
   (ii) இக்குழுக்களினால் இயேசுவுக்கு முன்வைக்கப்பட்ட பின்வரும் சவால்களுக்கு அவரின் மாறுத்தரங்கள் என்ன?
   (அ) பாவிகளோடு உறவு கொள்ளல்
   (ஆ) ஓய்வு நாளில் குணமளித்தல்
   (இ) உயிர்த்தெழுதல் பற்றிய வினா
   (iii) அந்த உரையாடல்களுக்கு இயேசுவானவரின் மாறுத்தரங்களில் இருந்து, இன்று நம் வாழ்வில் பின்பற்றக் கூடிய முன்மாதிரிகள் யாவை?

4. "இயேசுவானவர் சிறந்த ஆசிரியர் ஆவார்."
   (i) இறையரசின் ஆழ்ந்த கருத்துக்களை வெளிப்படுத்துவதற்கு இயேசுவானவர் கைக்கொண்ட **இரு** வழிமுறைகளைப் பெயரிடுக.
   (ii) சமவெளிப் பொழிவில் இயேசுவானவர் கூறிய 'பேறு' தரும் ஆசீர்வாத வசனங்களை நிறைவு செய்க.
   (அ) "ஏழைகளே நீங்கள் பேறு பெற்றோர்; ஏனெனில் .................."
   (ஆ) "பட்டினியாய் இருப்போரே, நீங்கள் பேறு பெற்றோர்; ஏனெனில் .................."
   (இ) "அழுது கொண்டிருப்போரே நீங்கள் பேறு பெற்றோர்; ஏனெனில் .................."
   (iii) மேற்கூறியவற்றில் காணப்படுபவற்றில் இருந்து நாம் தினசரி வாழ்வில் பின்பற்றக்கூடிய ஆன்மீக உண்மைகள் யாவை?

5. (i) (அ) முதல் திருத்தூதுப் பயணத்தில் பவுலுடன் செல்வதற்குத் தெரிவுசெய்யப்பட்டவரைப் பெயரிடுக?
   (ஆ) அந்தியோகிய சபையினர் இவர்களைத் தெரிவு செய்வதற்கு எவ்வாறு ஆயத்தம் மேற்கொண்டனர்?
   (ii) பின்வருவனவற்றில் **மூன்று** நகரங்களைத் தெரிவு செய்து அவர்கள் எதிர்கொண்ட சவால்களைக் குறிப்பிடுக.
   (அ) பாப்போ
   (ஆ) லிஸ்திரா
   (இ) பிலிப்பி
   (ஈ) ஏதென்ஸ்
   (iii) பவுலின் செயல்களிலிருந்து இன்றைய திருத்தூதுப் பணியாளரும் ஏனைய கிறிஸ்தவர்களும் பெற்றுக் கொள்ளக் கூடிய வழிநடத்துதல்கள் **ஐந்தை** எழுதுக.

6. "உங்கள் செல்வம் எங்கு உள்ளதோ, அங்கே உங்கள் உள்ளமும் இருக்கும்"
   (i) உலக செல்வத்தின் தீமைகளை வெளிப்படுத்துவதற்கு இயேசுவானவர் கூறிய **இரண்டு** உவமைக் கதைகளைக் குறிப்பிடுக.
   (ii) இவ்வுவமைகளுக்கூடாக செல்வம் பற்றி வெளிக்கொணரப்படும் இயேசுவானவரின் **மூன்று** சிந்தனைகளைக் கூறுக.
   (iii) ஏழ்மையில் வாழும் ஒரு சிறுவன் அவனது ஏழ்மை நிலையிலிருந்து விடுதலை பெறுவதற்கு நீர் செய்யக்கூடிய **ஐந்து** செயல்களைக் குறிப்பிடுக.

7. தரப்பட்டுள்ளவற்றில் **இரு** தலைப்புகளைத் தெரிவு செய்து, திருமறையில் காணும் உதாரணங்களுடன் சிறுகுறிப்பெழுதுக.
   (i) செபம்
   (ii) நன்றி செலுத்தல்
   (iii) ஆதித் திருச்சபை இன்றைய திருச்சபைக்கு வழங்கும் வழிநடத்தல்
   (iv) இறைவாக்குப் பணியின் முக்கியத்துவம்

* * *